## அருஞ்சொல் (பொருள்) விளக்கம்

| | | |
|---|---|---|
| **அசு** | – | (தன்னிலிருந்து) அசைந்து அதாவது சலித்து க்ஷீணித்து அதாவது மெலிந்து கொண்டிருப்பது. |
| **அந்நியோந்நியம்** | – | ஒருவருக்கொருவர், தம்மில் தம்மில், |
| **இரக்ஷா கர்த்தா** | – | இரட்சிப்பவர் |
| **உற்பவம்** | – | உற்பத்தி |
| **எரிசேரி** | – | காரக் குழம்பு |
| **கதாகதம்** | – | போக்குவரவு, நடமாட்டம். |
| **கத்துதல்** | – | சத்தம்போடுதல், அழுதல், (மலையாளத்தில்) எரிதல். |
| **கர்த்தா** | – | உண்டுபண்ணுபவர், செய்பவர், (இலக்கணம்) எழுவாய். |
| **கர்மம்** | – | (இலக்கணம்) செயப்படு பொருள் (இதனின்றும் கர்மம் ஒரு பொருள் என புலப்படும்.) |
| **கல்பிதம், கற்பிதம்** | – | (மனச்) சங்கற்பம், (மன) நிச்சயம், |
| **கழஞ்சு** | – | ஒரு எடை அளவு. |
| **காமக்கலை** | – | வீரியஸ்தானம், விந்துவின் இருப்பிடம் |
| **காளுதல்** | – | (மலையாளத்தில்) கூவி அழுதல், ஒங்கி எரிதல் |
| **கிருமி கீடாதிகள்** | – | புழுப்பூச்சி முதலியன |
| **கும்பி பாகம்** | – | கருப்பை |
| **கோஷ்டி** | – | சேட்டை, ஆட்டம், |
| **சங்கற்பம்** | – | கற்பனை, மனோநிச்சயம், பாவனை, எண்ணம், |
| **சம்யோகம்** | – | உடற்சேர்க்கை, |
| **சம்ரட்சனை** | – | பேணுதல், பாதுகாத்தல், |
| **சராசரங்கள்** | – | அசையும்பொருட்களும், அசையாப்பொருட்களும் |
| **சர்வக்ஞன்** | – | முற்றும் உணர்ந்தோன். |
| **சர்வ பூதம்** | – | அனைத்துப் பொருட்கள். |



| | | |
|---|---|---|
| **சஸ்யம்** | – | தாவரம் |
| **சஸ்யாதி** | – | தாவரம் முதலியன |
| **சாத்வீகம்** | – | சத்துவ குணம், முக்குணங்களில் ஒன்று |
| **சுயரக்ஷை** | – | தற்பாதுகாப்பு |
| **சுருதி** | – | கேள்வி, நூலறிவு, வேதம், அநுபவசாலிகள் எழுதிய நூல், |
| **சுவாதீனம்** | – | சொந்தம், தற்கட்டுப்பாடு, தன்வசமாதல். |
| **சுவேதஜம்** | – | வியர்வையினின்று உண்டாவது |
| **சுழுத்தி** | – | உறக்கம், |
| **சைதன்யம்** | – | சக்தி, ஆற்றல். |
| **சொஸ்தம்** | – | சுகம், நலம், |
| **சொஸ்தானம்** | – | சொந்த இடம். |
| **தனிகர்** | – | செல்வந்தர். |
| **தாமஸம்** | – | தமோ குணம் - முக்குணங்களில் ஒன்று |
| **திரிகுணம்** | – | முக்குணம்; சாத்பீக, ராஜஸ, தாமசகுணங்கள். |
| **திரிகுண ரகிதம்** | – | முக்குணமற்றது |
| **திரிகுணாதீதம்** | – | முக்குணம் கடந்தது. |
| **திருஷ்டாந்தம்** | – | மேற்கோள், எடுத்துக்காட்டு, உதாரணம், |
| **துரபிமானம்** | – | வீண்பெருமை. |
| **நசித்தல்** | – | நாசமாதல், அழிதல், |
| **நாபி** | – | உற்பத்திஸ்தானம், பிறப்பிடம் (தொப்புள் அல்ல). |
| **நிக்கிரஹித்தல்** | – | அழித்தல். |
| **நிரீஸ்வரமதஸ்தர்** | – | நாத்திகர். |
| **நிர்மோகி** | – | மோகமற்றவர். |
| **நிர்விகாரி** | – | விகாரமற்றவர், மாறுபாடற்றவர். |
| **பர்ணசாலை** | – | இலைகளால் வேயப்பட்ட குடில். |
| **பவிஸ்யத் காலம்** | – | எதிர்காலம், ஆரம்பகாலம். |
| **பஜித்தல்** | – | அர்ச்சித்தல், பூஜை செய்தல், |

| | | |
|---|---|---|
| | | சேவித்தல். |
| பாவம் | _ | (வடமொழி) துவக்கம், சலனம், உற்பவம். |
| பாவி | _ | (வடமொழி) சலிக்கின்ற, ஆரம்பிக்கின்ற |
| பிரதிபிம்பம் | _ | பிரதிபலனம், எதிர்த்தோன்றல். |
| பிரதிஷ்டை | _ | கோவில்களில் அமைக்கப்படும் உருவம், சிலை, |
| பிரம்மரந்திரம் | _ | பிரம்மஸ்தானம். சிரசு என்னும் ஆகாசமத்தியம், சுழிமுனை, |
| பின்னகதி | _ | வேறுபட்ட (சுவாச) கதி. |
| புரம் | _ | வீடு. |
| மதமாச்சர்யாதிகள் | _ | அகந்தை (செருக்கு), பொறாமை முதலானவை |
| மரித்தல் | _ | மறத்தல் |
| விகாரம் | _ | மனமாறுபாடு. |
| விகாராதி | _ | வேற்றுமைத்தன்மை முதலானவை. |
| விகாரி | _ | மாறுபாடு உடையவன். |
| விசாராதிகள் | _ | ஆராய்ச்சி, சிந்தனை, முதலியன. |
| வியாபித்தல் | _ | பரவுதல். |
| வெளியினுள்ளில் | _ | புறத்தினுள்ளில் [இதில் வெளி என்பதுவெட்ட வெளி (ஆகாயம்) அன்று, புறம் என்பதாம். இச்சொற்றொடர் இந்நூலில் பல இடங்களில் தோன்றக் காணலாம்.] |
| இராஜஸம் | _ | இரஜோ குணம் _ முக்குணங்களில் ஒன்று |
| லலாடம் | _ | புருவமத்தியம். |
| ஜலபானம் | _ | நீருணவு |
| ஜீவ சக்தி | _ | உயிராற்றல். |
| ஜீவ சிவோஹம் | _ | ஜீவனே சிவன். |
| ஜீவ ஹிம்சாதிகள் | _ | உயிர்வதை முதலியன |
| ஜீவிகள் | _ | உயிரினங்கள். |
| ஸ்தாபன சக்தி | _ | நிறுவும் ஆற்றல், சங்கல்ப சக்தி. |
| ஸ்தாபனம் | _ | நாட்டப்படுவது, சங்கல்பம். |



HIS HOLINESS
SWAMI SIVANANDA PARAMAHAMSA
FOUNDER OF SIDHASAMAJ